உ

கணபதி துணை.

## திருச்சிற்றம்பலம்.

# மஹாராஜா துறவுமூலம்.



### பாயிரம்.

அமரர்கள் பரவுந் திருமுது குன்றி
லாழத்துப் பிள்ளையைச் சிகரிக்
குமரசற் குருவை யிமகிரி ராஜ
குமாரியாம் பெரியநா யகியை
மும்மலமு மொருங்கே யகற்றிடு முக்கண்
முதல்வனைச் சாந்தநா யகனை
நமதெணப் படியே முடிந்திடத் தினமு
ற்றிறைஞ் சிவாழ்த் திடுவோம். 1



### வேறு

லக்கோ டிரண்டுகெவான்
கை மூன்று விழிதரிசிற்
தன்மதமுந்
துலங்க வருமொண் பிடியுலக
மூய்ய வுதவு மொருகளிற்றை.
யுலவா விருத்த சைலத்தில்
வைடம் பரவு மாழத்து
வாழைங் கரனை மனநினைவாம். 2

## வேறு.

இருட்கவி வலியின் ஞானநன் னெறிக
ளிறந்துயிர் கொடுநெறி மேவி
மருட்கொடு கலங்கா வகைகவி யென்றும்
வந்தணு காப்பதி தன்னிற்
றெருட்சத்தி கருணை யுருவதாய் நின்று
தெளிவிக்கு மிறைவியெங் குருவோர்
அருட்கடல் பெரிய நாய்கி யுலகுக்
கனைமுதல் வியைப்பணிந் திடுவாம். 3

திங்களார் சடையிற் கங்கைநீர் துளிப்பத்
திருந்திழை யுமையுளங் களிப்பப்
பொங்கரா வொடுநற் புலிமுனி வர்சண்மால்
போதய னமரர்கள் போற்றத்
துங்கநான் மறைக டுதித்திட வைந்து
தொழில்விரிந் திடப்பொது வதனிற்
செங்கழ லதிர நடஞ்செயும் பொருளைத்
தினம்பணிந் திடரொழித் திடுவாம். 4

## வேறு.

அருளுருவா யுயிர்கடமக் கன்னை யாகி
யஞ்ஞானந் தனையகற்றி யமல மாகி
மருளிலதாய் மெய்ஞ்ஞான மாகு முத்தி
வாய்த்திடவே காத்தருளி வானோ ரேத்த
இருள்கெடவே மிளிருமிருங் கழல்க ளார்ப்ப
விறைபுரியுந் திருநடத்தாற் களித்து வாழுந்
தெருண்மருவு மறைநான்கும் பரவுந் தில்லைச்
சிவகாம சுந்தரியைச் சிந்தை செய்வாம். 5





## வேறு

செக்கர் போன்றொளிர் முக்கட் சிலம்பினை
மிக்க பேரருள் வேலையை யோர்கொம்பாற்
றக்க வன்பர்க் குதவுந் தருவினை
இக்க னைத்திறை வேற விறைஞ்சுவாம். 6

## வேறு.

கடிகமழ் கரிய கூந்தற் கனிமொழித் துவர்வாய்த் தெய்வப்
பிடிதனைக் கோட்டால் வள்ளிப் பெண்கொடி படருஞ் செய்ய
படிபுகழ் புயமாங் குன்றிற் பாய்வண் கழுநீர் நீப
மடலவிழ் செழுந்தார்ச் செவ்வேண் மலரடி வணக்கஞ் செய்வாம்.

## வேறு.

வண்டுழா யலங்கன் மாயவன் மலர்மேல்
வதிந்தநான் முகன்மறை யறியாத்
தொண்டைவாய்க் கெண்டை விழிக்கழை மொழியொண்
டொடியிடை யுமையையோ ரிடத்திற்
கொண்டகோ னருளைப் பொருளெனக் கருதிக்
குலவிய சாதனந் தரித்து
மண்டிய வடியார் யாவர்மற் றவர்தாண்
மனத்தினுஞ் சிரத்தினும் வைப்பாம். 8

## வேறு.

சகரர்தம் வலியையுந் தடந்தி ரைக்கட
லகலமும் பின்புளோ ரகழி லஞ்சிதான்
புகழுற விளக்கலே போல விச்செயு
டகைதரு கலைஞர்நூ றனைவி ளக்குமால். 9

திங்களொண் கவிகைத் திகிரியந் திணிதோட்
டிகழ்கடற் றனமா ராஜ
னங்கண்மா நிலத்திற் றுறந்துவீ டடைந்த
வரியவிக் காதையைத் தமிழா
லிங்குமா தவத்தோ ரிசையுமென் றிசைப்ப
விசைத்தனன் வீடுறக் கேட்டோர்
கொங்கவிழ் பொழில்சூழ் பழமலை யுறையுங்
குமாரதே வென்னுமா முனியே. 10

## வேறு.

சிவன்றிரு வுருவா மைந்து சின்மய வெழுத்தும் வாழி
தவந்தரு நீறும் வாழி நயனநன் மணியும் வாழி
நவின்றருங் குமார தேவன் கழலிணை யிரண்டும் வாழி
சிவன்றிரு வடியார் தம்மோ டாருயி ரனைத்தும் வாழி.

பாயிரம் முற்றிற்று.

---



## நூல்.

தருக்கிளர் நைமி சாரணி யத்திற்
றங்கிய முனிவர்கள் சூதன்
றரப்பணிந் தேத்திக் கதைகள்பற் பலவா
வகுத்துரைத் தனமஹா ராஜன்
றிருக்கதை யெங்கட் குரைத்திலை யதுநீ
செப்பெனச் சுருதியிற் சொல்லுஞ்
சுருக்கமில் காதை யிதுவெனத் தொகுத்துத்
தோமறக் கேண்மினென் றுரைக்கும். 12

குழைத்ததண் சினைத்தே மாவினொண் கனித்தேன்
குலவிய பலவினற் பலத்தேன்
றழைத்திடு கதலிப் பழமுகுத் திடுதேன்
ரூன்றிரண் டிலஞ்சியிற் றதும்பி
விழுத்தகு வயலிற் பாய்தர விளையு
மிகுகரு ணடைதே சந்தா
னிழைத்தநற் றவத்தா லுயிரெலாம் புரந்தங்
கிருந்தர சாளுமோர் குரிசில். 13

## வேறு

மஞ்சம ரிஞ்சிசூழ் மாபு ரத்திருந்
தெஞ்சலி லெண்டிசை யிறைவர் தாடொழத்
தஞ்சமென் றடைந்தவர் தம்மைக் காத்திகல்
வஞ்சகர்க் காய்மஹா ராஜ மன்னனே, 14

வேறு

தருநிழ லரசு வைகுஞ் சதமகன்
றிருவின் மிக்கா
னுருவினின் மதனின் மிக்கா னுலத்தினிற்
பலத்த தோளான்
செருவினி லரியே றன்னான் றேனெடு
ஞிமிறும் பாட
முருகுடைந் தொழுகுந் தாரான் மூவுல
களிக்கும் வேலான், 15

வேறு

அரசர்வந் திடுதிறை யளக்கு முன்றிலான்
முரசுக ளனுதின முழங்கு மன்றலான்
கரைபொரு திரையெறி கடலந் தானையான்
அருவரை மார்பினன் யாளி மொய்ம்பினன், 16

அரசர்தம் முடியுழு தவிருந் தாளினன்
எரிதவழ் திகிரியை யேந்துந் தோளினன்
மருவலர் வலியினை மாற்றும் வாளினன்
றருநிதிக் கொடையினன் றருக்கு நாளினே, 17

வேறு

கவரியோ டால வட்டங் காரிகை
யார்கள் வீசப்
பவளவா யரம்பை யன்னார் பாகடை
யுதவ முத்தத்
தவளவா ணகையார் கீதந் தனிநடஞ்
செய்ய நின்று
குவலய மன்னர் போற்றக் குடைகடற்
றானை சூழ, 18



இந்திர ஞால யம்போ லிலங்கிய
மண்ட பத்தில்
சுந்தர மிருக ராஜன் சுமந்தபூ
வணையின் மீது
வந்திருந் தவனி தன்னை மனுநெறி
முறையிற் காத்தே
யந்தமில் போகந் துய்த்தங் கிருந்திடு
மரசர் கோமான் 19

தூம்புடைப் பிறையெ யிற்றுத் துத்தியி
ராயி ரந்தோட்
பாம்பினாற் பரிக்க லுற்ற பாரினைப்
பரிக்கப் பின்னர்
மேம்படு புதல்வர் நந்தம் வீறுடை
வயிற்றில் லென்று
தேம்படு தெரியன் மார்பன் சிந்தையா
குலங்க லுற்றான். 20

கங்கையே முதலா மிக்க கடவுண்மா
நதியிற் றோய்ந்தும்
பங்கயா சனன்மா றிங்கட் பவளவார்
சடையான் றன்னை
அங்கையாற் பூசை செய்து மதிதிகட்
களித்துந் தீயில்
பொங்குமா குதிக ளீந்தும் பூவலம்
வந்துந் தேவர், 21

ஆலயஞ் சாலை யக்கி ராரநந்
தனவ னங்கள்
கோலமா ரிலஞ்சி கூபங் குளம்பல
செய்து மீரெட்
டேலுமா தானத் தோடே யிரணிய
முதலீ ரைந்து
சாலநற் றன மீந்துந் தருமமெண்
ணன்கு செய்தும், 22

தவம்பல புரிந்து வேந்தன் றனையனைப்
பூத்த பின்னர்ப்
பவந்தனைத் துடைத்தேன் மேலாம் பரமநற்
பதமு முண்டென்
றுவந்துசா தககன் மத்தோ டொழிவறு
கரும மெல்லாம்
நவந்தரச் செய்து காம நன்மஹா
ராஜ னென்றே, 23

வேறு.

வேத நீதியிற் கூறி வியன்றர
ஓத வெண்ணெண் கலையு முணர்த்துவித்
தேத மற்ற குரவற் கிரணியம்
போது மென்னப் பொழிந்தனன் கொண்டல்போல்.

கொடிநெ ருங்குங் கொடிஞ்சியந் தேர்பரி
கடம விந்த கயமொண் சிவிகையிப்
படியி லூரப்பயிற்றுவித் தாசிலா
வடிவி லங்கும கற்கு மணஞ்செய்வான். 25



மடக்க லன்ன பலமுள்ள மாமன்னன்
இடங்கொ ளெண்ணெழு தேசத் திறைவர்க்கும்
முடங்கல் போக்கினன் கண்டு முடிமன்னர்
தடங்கொள் சேனைகள் சூழ்வரச் சார்ந்தனர். 26

வேறு.

வடிகொள்வெண் சுதையாற் பித்திகை தீற்றி
வானுற மணிக்கொடி நிரைத்துக்
கடிநறுஞ் சாந்தங் குங்குமந் தன்னற்
கமழ்தர மறுகெலா மெழுகிப்
பொடிகொள்சிந் தூரத்தாற் கோலமே புனைந்து
பூமலர் பொரிநனி சிதறிக்
கொடிகொண்மூ டெயின்மேன் மாடமொண் சிகரி
கோதறப் புதுக்கியே குலவ. 27

வேறு

கதலியுங் கமுகு நட்டுக் காவண
மலங்க ரித்துப்
புதியதோ ரணங்கள் கட்டிப் பொற்குடஞ்
செரித்துத் தீபம்
இதமுற வெங்கும் வைத்தே யிந்திர
நகரம் போல
மதுமலர்த் தாம நாற்றி மாபுரி
யலங்க ரித்தார். 28

### வேறு.

வில்லி லக்குகை வேந்தர் மரபினில்
நல்ல சாமுத் திரிகநூ னன்கதாச்
சொல்லி லக்கணத் தோடு துரிசிலா
முல்லை மாலை முருகு விரியவே. 29

### வேறு

மூவுல கதனி லுள்ள முகிழ்முலைக்
கருங்கட் செவ்வாய்ப்
பாவைய ரெழிலிற் போதன் பகுத்தெடுத்
துயிரோ டேய
ஓவியந் தீட்டி ஞனென் றுலகினி
லுரைக்கச் செய்ய
பூவுறை திருவி ரும்பும் பொற்புட
னவத ரித்தே, 30

### வேறு

இலங்கிய வாலொண் டளிர்குழைத் தினிய
விருதனக் கோங்கிணை யரும்பி,
நலங்கிள ராம்பல் குமிழிரு குவளை
நண்ணுசெஞ் சரோருகம் பூத்துத்,
துலங்கிய புயலைச் சுமந்திரு தளாற்
றேமிலா மின்னென நடங்கிப்
பலந்தரப் படருங் கொடியினை வேதப்
பண்பினின் மன்றல்செய் வித்தே, 31



### வேறு.

அருந்ததி கணவன் முதன்முனி வரர்க
ளருமறைக் கிழவர்க டம்மால்
பொருந்திய கங்கை பூம்புன லாட்டிப்
பொன்னவ மணிகளாற் குயின்ற
விரிந்திடு மடங்கன் மென்றவி சேற்றி
மிளிர்நவ மணிமுடி கவித்துப்
பருந்தடர் வேலான் பௌவமார் புவியைப்
பரியெனத் தோன்றல்பா லளித்தான். 32

சோகமே யின்றி யிருந்தனன் வேந்தன்
றோன்றலும் பார்பொது நீக்கி
ஏகமாய்ச் செங்கோ லெங்கணுஞ் செல்ல
வெண்டிசை விசயமுஞ் செய்தே
மாகநா டென்னப் போகமே துய்த்து
மடந்தையோ டிருந்தன னென்றான்
வரகைவே லவன்பி னென்செய்தா னென்ன
மறையவர்க் குயர்முனி வகுக்கும். 33

மனைவியுந் தானு மோர்நினை வாகி
மாறுபா டின்றியோர் காலும்
தனையுணர் யோகி தந்தைதாய் கடவு
டங்களை யனுதின மிறைஞ்சி
அனையவ ருரைத்த நெறிதனி னடந்து
மருத்தங்கண் மனதினிற் றரித்தும்
வினையம துடனே நூன்முறை யவரை
வினவியுஞ் சிலபகல் போக்கி, 34

தனியிட மதனி லிருந்திரு வர்களுந்
தங்களிற் ருமுணர்ந்து சாவித்
துனிசெய்மா மாயைப் பிறப்பது நீங்கிச்
சுகமதை யடைந்தனு தினமும்
இனிமைய தாக விருக்கலா ஞானத்
தென்றெணி ஞானிகட் சார்ந்து
தனியவர் பாத பூசனை புரிந்து
நாடொறும் வினவினர் நன்ருய். 35

இருவரி லரசன் றனக்கறி வோங்க
விருவகைச் சார்வையு மகற்றிக்
கருவுடற் காவ றனையுங்கை விடுத்துக்
கருத்தசை யாதுமெய் யுணர்வை
மருவிடி லகப்பற் றற்றுமேல் வீடு
வாய்த்திடு மதற்குமெய்ஞ் ஞானக்
குருவரு ளின்றி விளங்கிடா தெனவே
கொண்டனன் மனத்தினிற் றுணிவே. 36

மனைதனி லாசை பொருந்தியே நின்று
மகிமையின் ஞானியா மெனவே
தனைமிக மதிப்போன் றன்னைவந் தொருவன்
றந்திடு ஞானமென் றிரந்து
வினவன்மட் டையினைப் பருகுவோன் றன்னை
வேண்டித்தென் னம்பழந் தனையே
இனம்பணித் திரிவோன் புத்திபோன் மெனவே
யியம்புவர் முற்றுணர் பெரியோர்.



வேதவா கமசாத் திரபுரா ணங்கள்
விளங்கவே கற்றுணர்ந் தவற்றைத்
தீதற வெவர்க்குந் தெளிவுற வோதிச்
செப்பிய வந்நெறி யதனிற்
சாதக மிலாத குருவினை யொருவன்
றுனடைந் தானந்தம் வினவல்
ஏதமாங் கழுதை தன்னைக்குங் குமத்தி
னியல்புகேட் டிடுதல்போன் மென்றே, 38

இவர்க ளிடத்தி லருள்சிவ பத்தி
திருந்திய துறவுமெய்ஞ் ஞானம்
ஆவதோர் வடிவாம் வேதமா முனியை
யமலவா ரணியத்தி லடைந்தே
தேவர்க டேவே துன்பமோர் காலுஞ்
சென்றிடா முத்திதா னெய்திச்
சாவதும் பிறப்பு நீங்குமோர் நெறியைச்
சாற்றெனத் தாழ்ந்திட முனிவன். 39

இருவகைச் சார்வாம் புறப்பற்றை நீக்கி
யிச்சையின் மீட்டதி னினைவு
மொருவியே யுடற்கா வலையுங்கை விடுத்தே
யுட்கர ணங்கள்வா தனையும்
குருவரு ணெறியே யொடுக்கிடில் வீடுங்
கூடுந்தா னுகவே பவத்தின்
கருவழிந் திடுமிந் நெறியைநீ விரைவிற்
கைக்கொண்டு செல்லென வுரைத்தான் 40

அந்நெறி குருவா லயமுந் திரிவு
மகன்றிடத் துணிவ தாக்கேட்டு
முன்னெறி யான வரசியற் கையினின்
முயன்றனன் சிறிதுநா ளொருநாட்
பின்னெறி யதனை நினைந்தனை வரையும்
பெயர்ந்திட விடைகொடுத் தரசன்
மன்னெறிக் கோல மகன்றந்தப் புரத்தில்
வதிந்தன னொருவனுய்த் தனித்தே. 41

அரசர்க ளமைச்சர் புரோகிதர் பெரியோ
ரனைவரு மவ்விடத் தேகி
அரசனை நோக்கி நித்திய கரும
மகன்றுவா ளாவிருந் திடுதல்
அரசிலக் கணமன் றெனவவர் வேண்ட
வவர்களை நோக்கியே வேந்தன்
அரசியற் கையினை வேண்டல னென்னை
யறியவே வேண்டின னன்றே. 42

ஆண்டதோ ரரசு தனிலும்போ கத்து
மாசையற் றேனினி வேண்டேன்,
மாண்டதோர் வனத்தி லொருவனுய்த் தனித்தே
மனத்தசை வறுத்துவீ டடைவேன்
பூண்டவென் மனமிங் கினித்திரும் பாது
போகத்தைப் பொருளென வெண்ணி
வேண்டல னிங்க ளரசனு வேறே
விதித்துக்கொ ளுங்களென் றுரைத்தான். 43



ஆதியி னினது தாதையு நினையே
யரசினி னிளமையிற் சூட்டத்
தீதின்றி யுனது புயவலி மையினிற்
செகபதைத் தாங்கினை யினிமேல்
நீதியி னுநிய மதியினு தரவி
னின்னைப்போ லொருவர்மற் றுளரோ
ஈதியற் கையதன் றிவ்வுட லுடனே
யிச்செல்வ மன்றிவே றுளதோ. 44

அலதுநீ யேகி னவனியுங் காப்பற்
றவத்திலே யலைந்தி டும்யாழும்
சலனம துறவே யித்தகை யெமைநீ
தவிக்கவிட் டேகுதல் கடனன்
றிலகிட வெமக்கீ தருளென வமைச்ச
ரியம்பிட வரசனும் பார்த்தே
உலகமெய் யெனவெண் ணுறுமதி யுடையோர்க்
குரைப்பினு முணர்வுதி யாதால். 45

இவ்வர சியற்கை யற்பமற் றிதனு
லெய்திடுந் துன்பி னுக்களவின்
றவ்வகை யதனை யூசமின் மையினு
லறிகிலிர் நீங்களின் பென்றே
எவ்வகை நினைந்தீ ரினியெக்கா லுங்கட்
கிதின்ப மலதெனத் தோன்றும்
ஒவ்வமற் றிதனுக் கூகமே தோன்று
துங்களுக் குல்சயூ குதிக்கும். 46

என்றுமற் றனேக மாவிரித் தரச
னெடுத்தமைச் சர்கடமக் கியம்பி
நின்றுபின் னவரை நிலுமென நிறுத்தி
நிதிதுனும் பொன்மனை விடுத்தே
சென்றுபின் னகர வீதியி னடக்கத்
திரண்டனை வர்களும்பின் றொடர்ந்து
வன்றுய ரடைந்து வாடியே மெலிந்து
வாரியி னோசையி னழுதார். 47

அவரவர் வினையி னவரவர் வருவா
ரவரவர் வினையள வுக்கே
அவரவர் போக மென்றதே யாயி
னாருக்கார் துணையதா குவர்கள்
அவரவர் தேக முளபொழு துடனே
யாதர வாரென நாடி
அவரவ ரடைத னெறிகன்மத் தடையு
மாதர வாதர வாமோ. 48

வினையுள ளளவுங் கூடியே நிற்கும்
வினையகன் றிடிற்பிரிந் திடுமால்
வினையினால் வருமா தரவினி னியற்கை
மெய்யுணர் வத்தகை யலவே
வினையிலை யுங்க ளிடத்தினா னிருக்க
மெய்யுணர் வொன்றையே நாடி
வினையறு கானம் புகுதவே வேண்டி
விரும்பினே னீர்நிலு மிங்ஙன். 49



என்றுநல் வேந்த னேதிலார் போல
வேகின னனைவருங் கண்ணீர்
நின்றெதிர் சொரிய வாய்விட்டே யலறி
நின்றனர் தமர்கள்பின் னேகி
இன்றெமை யாவர் காத்தளித் திடுவா
ரினியைநீ யேகுத னீதி
அன்றென வுரைத்தா ரவர்களை நோக்கி
யரசனீ துரைத்தன னன்றே. 50

வேறு

உறவாகு மெனவெனீர் தொடர்பதியல் பன்றாகு
முயிர்கட் கெல்லாம்
உறவாகு ஞானநனி பகையாகு மஞ்ஞான
முய்த்து நோக்கின்
உறவான வதையடைந்து பகையான விதைநீங்கி
யொருமை யாக
உறவாத றனக்குத்தா னேயெனமற் றுறவுவிடுத்
துறையு மென்றான் 51

தந்தைதா யிருவருந்தம் புதல்வனெனும் வாஞ்சையினாற்
றான்பின் னேகி
மைந்தவா வெங்களிரு வரையுமெவர் காப்பதற்கு
வைத்தாய் நீதான்
சிந்தைதா னுனக்கெங்கே மகனேயுன் றிருமுகத்தைத்
திரும்பிக் காட்டாய்
நொந்துதான் பெற்றவயி றெரிகின்ற தெனவுரைக்க
நோக்கி மன்னன். 52

அறிவைநோக் கிடிலதற்குத் தாய்தந்தை யிலையிவ்வுட
லதனை நோக்கில்
இறையுநீ ருபாதான காரணமன் றிருமாயை
யினிதுண் டாகும்
மறியிதுவிங் காயின்மண்ணி லெனைப்பெறு தவரிலைக்
கொள்கை நீரு
நிறையுமதி யிலரேநீர் நில்லுமென விருவரையு
நீத்துப் போனான். 53

அரிவையர்க டமக்கிலக்க ணங்கூறு நூலதனி
லதனை யெல்லாம்
உரிமையதா வுடையவளா மினியமனை தொடர்ந்தேகி
யுருகி நின்று
பரிவினுட னடிகள்டணிந் தரற்றியே பதைபதைத்துப்
பனிகண் பாயத்
தரியெனுமை விடுத்திலக மதனிலொரு கணமேனுஞ்
சாவே னென்றாள். 54

நின்னுடைய நாயகனை நினதுள்ளே யுறநோக்கி
நிற்க மாட்டா
தென்னுடைய நாயகனென் றென்றனையே கருதிநீ
யுழல்வ தென்னே
மின்னனைய விடையாய்கே ளனைவருக்கு நாயகனோர்
மேலா மீசன்
அன்னவனை யேதேடிப் போகின்றே னெனவரசற்
கரிவை சாற்றும். 55



ஞானமா னதுபொதுவே நூலதனிற் றுறவதற்கு
நவில்வ தில்லாள்
ஆனமா தினையலவோ விடுகவென வறையும்பதி
யான வுன்னை
ஈனமா விடுகவென வறையுமதோ துறவறமிங்
கெனக்கென் சொல்லும்
ஆனதா லுமையொழிந்து கதியிலையே யெனவெணியா
னடுத்தே னென்றாள். 56

ஆகமத்தின் விதிதவறு தறைந்தனைநீ விவேகியே
யாவா யானும்
தேகமுதற் பிரபஞ்ச மதனினசை விடுத்துவனஞ்
செல்லா நின்றேன்
நாகமுலைபா யெனுரை தடுத்தலுன்றன் விரதமல
நாடு தன்னில்
போகுதியென் றவளைவிடுத் தேதிலரைப் போலகன்று
போகா நின்றான். 57

விரிவாய ஞானமதை யுணர்ந்தாலு மடந்தைபதி
விலங்க நிற்றல்
அரிதாய தகைமையினா லேங்கியே பதைபதைத்தங்
கவனை நோக்கித்
தரியாது கதறியே வினைதனையே நொந்துதான்
றளர்ந்து நின்று
தெரியாது மறைந்தவிடந் தனின்மிகவு முருகியே
தேம்பி வீழ்ந்து. 58

வேந்தனே யுனைவிடுத்து முலகமதி லிருக்கவோ
விதித்தா னீசன்
தீர்ந்ததோ வுமக்கெனக்கும் வினைதானு மின்றளவிற்
சேர்ந்து நிற்கும்
போந்தவுமை யெக்காலங் காண்பேனா னினியெனவே
புலம்பி மாதும்
சார்ந்தனள்பின் றிரும்பியே நகரதனின் மாதுலன்றன்
சார்பு தன்னில். 59

அரசனந்த நகர்விடுத்துத் தேசநா டெளுமகன்
றடவி சென்றே
இரவுபக லகநிலையே நிலையாக விருந்தவர்க
ளிடமே சேர்ந்து
பரகுருவி னுபதேசத் தரியபொருள் வினவியவர்
பகரக் கேட்டுத்
திரமனமா யொருவராற் கலங்காத ஞானியாய்த்
தீர னாகி. 60

## வேறு

நகர்தனி லேகிப் பிச்சை நண்ணியே
மனைக டோறும்
அகமகிழ்ந் தங்கை யேற்றே யவ்விடத்
தருந்தி யாங்கே
செகமுளோர் பேயென் றெண்ணிச் சிறித்திட
நாண மின்றி
இகபரத் திச்சை யற்றே யேகனா
யுலாவ லுற்றான். 61



பொருந்திவா ழிடமொன் றாகிற் பொருந்திடும்
பற்றென் றெண்ணி
இருந்திலனோரி டத்து மெங்கெங்கு
மொருவ னாகித்
திருந்திய சமாதி விட்டுத் திரும்பிடா
துறைக்க வுன்னி
இருந்திருந் திடங்க ளெங்கு மேகமே
நோக்கி நின்றான். 62

தோன்றிடு முலக மெங்கே தோன்றிடு
மென்ன நோக்கித்
தோன்றிடு நினைவி லென்றே தோன்றிய
நினைவு தானும்
தோன்றிடு மிடத்தைப் பார்த்துத் தோன்றிடுஞ்
சொரூபத் தென்றே
தோன்றிடும் பொருள்க ளெல்லாஞ் சொரூபமே
யென்று கண்டான். 63

தோன்றிடும் பொருள்க ளுண்டாய்த் தோன்றியே
யின்ப மாகித்
தோன்றிடு மதனா லந்தச் சொரூபமே
யென்று கண்டு
தோன்றிடுஞ் சொரூபந் தன்னிற் றோன்றுமீ
தசத்தே யென்று
தோன்றிடுஞ் சொரூபந் தானாய்த் துளக்கமற்
றிருந்தான் வேந்தன். 64

அடிநகர் தோறுஞ் சென்றுங் கானகந்
தோறுஞ் சென்றும்
படிவல மாக வந்தும் பார்வைமா
ருட்ட மின்றி
நமடிவிலா மனத்த ஞகி மாசிலா
நிலைமை பெற்று
முடியுடை வேந்தர் வேந்தன் முத்தியே
வடிவ மானுன். 65

முத்திபே வடிவு மான முடியுடை
வேந்தர் வேந்தன்
எத்திசை தனக்கும் ராஜ னெமைவிட
வேறில் லென்று
சத்திப மாக வெண்ணித் தன்னிட
மதனிற் றன்னைச்
சுத்திசெய் தனத்து மாகிச் சுயஞ்சோதி
யாகி நின்ருன். 66

தன்னையே யன்றி யொன்றுந் தானுதி
யாவிடத்தின்
மின்னையே யொத்த வைய மித்தைகற்
பிதம தென்றும்
பொன்னையே யன்றி வேறு பூடண
மிலது போல
என்னையே யன்றி யொன்று மில்லெனத்
தேர்ந்தான் வேந்தன். 67



உலகினை வேற தாக வுணர்ந்திடிற்
பந்த மாகும்
உலகினைத் தானே யாக யுணர்ந்திடின்
முத்தி யாகும்
இலகிடத் தோன்ற லெல்லா மென்னினை
வேயென் றெண்ணி
இலகிடக் கண்டு வேறற் றிருந்தன
னிளமை வேந்தன். 68

ஏகசக்கரம தாக விருந்தர
சாள்வோன் செல்வப்
போகமுந் திரண மாமப் போதுநாட்
டரசி யர்கை
யூதுபுந் தியினு லா:சா னுபதேசத்
தாள வந்தச்
சோதுமற் றினோ டெய்தித் தொழிலெலா
முடித்தான் மன்னன். 69

பந்தம்வீ டென்று மில்லைப் பரம்பொரு
ளொன்றேயென்றும்
தந்தஞ்சங் கற்பத் தாலே சாலமோ
கிப்பர்களீயோர்
அந்தமா திசளு மில்லா வரும்பொரு
ளுமே யென்று
சந்தத நோக்கி யந்தத் தற்பரந்
தானே யானுன். 70

குறைவிலா நிறைவ தாகிக் குளிர்ந்திளைப்
பாறி வேந்தன்
இறையள வேனுந் துன்ப மின்றியே
யின்ப மாகி
உறைவிட மின்ன தென்ன வோர்நட
மின்றி யெங்கும்
நிறைவதே யிடமாய் நின்றா னிகரின்மா
ராஜன் றானே. 71

எங்குமாய் நிறைந்து நின்ற வேகராச்
சியம தாள்வோன்
தங்குத லின்றி யெங்குந் தானெனக்
கண்ட தூயோன்
இங்குறைந் தகன்ற பாண்டத் தியல்பினெஞ்
சுருவம் பற்றி
அங்குரு வகற்றி நின்றா னனந்தி
யாகி வேந்தன். 72

சீவன்முத் தர்கள்பா னிற்குஞ் செப்பிய
மனத்த ரூபம்
மேவரும் பரம முத்தி மேவிடி
னாச மாகும்
தாவரு நிலைமை நன்றாய்ச் சற்குரு
வருளாற் பெற்றுக்
கேவல மாகி நின்றான் கேடிலா
ஞான வேந்தன். 73



இத்தகை ஞானம் பெற்றே யெழின்முனி
யாகி யெங்கும்
சித்தனாய்த் திரித றன்னைச் செப்புமுன்
னமைச்சர் தம்முள்
வித்தக னொருவன் கேட்டு வினவிட
வேண்டு மென்றே
கத்தனா மரசைத் தேடிக் கண்டடி
பணிந்து நின்றான் 74

பூவணை யாகி வானம் பொருந்துமேற்
கட்டி யாகித்
தீவம தாகி யிந்து செங்கதிர்
வீசுங் காற்று
மேவுசா மரம தாகி விடுதலை
மனைவி யாகிக்
கேவல மின்ப மாகிக் கிளர்ச்சியாய்
நின்றான் வேந்தன். 75

ரதமுதற் சேனை சூழ ரத்நசிங்
காச னத்தில்
விதவலங் காரத் தோடு வீற்றிருந்
தமரும் வேந்தன்
உதவுகோ வணனாய் மேனி யுருத்தெரி
யாத நீறாய்
முதன்முடி விரித்து நின்றான் முனிவனா
யொருவ னாகி. 76

சரிரத மிவர்த லின்றிக் கானடை
யாகி யெங்கும்
உரியதோர் மனையூ ணின்றி யூரெங்கு
முண்பா னாகி
அரியரா சாங்கக் கோல மகற்றியே
தவாங்க மாகித்
திரியுமவ் வரசை நோக்கிச் செப்பின
னமைச்சன் றானே. 77

அவனியி னினக்கு மேலோ ரரசனு
மில்லை யிந்தத்
தவவடி வாகி யெங்குஞ் சரித்திட
லெற்றி னுக்கோ
நவமதா யுடலி தோடே நண்ணுவ
தெனையி தன்றி
இவனெனக் கருள வேண்டு மெனக்கறி
வோங்கு மாறே. 78

பதத்தினை வேண்டின் முன்னம் பற்றிநின்
றில்ல றத்தைப்
பதப்பட நிறுத்தி யேகல் பண்பதா
மேலா முத்திப்
பதத்தைவேண் டிடிலோ ஞானப் பார்வையிற்
கூடு நீயெப்
பதத்தினை வேண்டி யிந்தப் பரதேசி
யான தென்றான். 79



அமைவுடை யமச்சின் மிக்கோ யடைவுடன்
வினவிக் கேட்டாய்
இமையள வேனுஞ் சித்த மிதுவது
வெனவோ டாது
சமைவுடன் கேணீ சொன்ன சங்கைக்குத்
தரங்க ணன்றாய்
நமைவிட வேறோர் வேந்து நாட்டிலை
யென்ப தொக்கும் 80

பதமதை வேண்டி னில்லைப் பதப்பட
நிறுத்தி யேகல்
இதமென்ற லொக்கு முத்தி யெய்துதன்
ஞானப் பார்வை
விதமதிற் றோன்று மென்றாய் விருப்பமாய்க்
குடும்ப பாரத்
திதமதா யழுந்து வோருக் கெங்ஙனம்
பார்வை தோன்றும். 81

மனமிரு பொருளைப் பற்ற மாட்டாதட்
டாவ தான
இனமவை புறநோக் கான வேதினாற்
கூடும் வீடு
கனவுண்ணோக் காகு மில்லங் கருதிய
புறநோக் காகும்
அனகவிவ் வாகந் தோன்ற வறைகுவ
னாமே கேளாய். 82

பஞ்ச பூத மழிந்துபோம் பானுத்
திங்க ளுடுக்கள்போம்
வஞ்ச வசுரர் மடிந்திடுவர் மாகர்
பதம்போம் வல்லரக்கர்
துஞ்சு வார்கள் போகிபதந் துஞ்சும்
ப்ரமன் பதந்தானும்
துஞ்சுந் திருமால் பதந்துஞ்சுந் துஞ்சா
தொன்றே பரமபதம். 89

தோலி ரத்த மெலும்பிறைச்சி சுக்கிலமேதை
மச்சை யொன்றாய்த்
தூலி கரித்த வுடம்பாகுந் தொட்ட
வெவையுந் தன்வடிவாய்க்
கோலி யடக்கிக் கொளுமிதனைக் கூறு
கூறு நோக்காது
போலி யுணர்வோர் மகிழ்வெய்தும் புனித
மென்றும் பரமபதம். 90

அரந்தை யதனை யெழுங்காக வறையக்
கேணீ யவனியெல்லாம்
பரந்த சிருட்டி திதியொடுக்கம் பண்பாய்
நிகழுஞ் சிருட்டிதனில்
பொருந்து பெரிய துன்பைந்து போய்மாண்
டிறில தெண்மடங்கே
இருந்த திதியு மிரண்டாகு மிளமை
யென்று மூப்பென்றும். 91



விருத்த பருவ மிகத்துன்டம் விளங்கு
மிளமையிரண்டவையின்
வருத்து பிணியின் மிகத்துன்பம் வளமை
யிளமை மூன்றாகும்
கருத்த தறியாக் குழந்தையென்றுங் குமார
மென்றுங் காளையென்றும்
அருத்த மறியா ததிற்றுன்ப மடையும்
பாலப் பருவத்தில். 92

தந்தை தாயா ராசிரியர் தாங்கண்
முனித றனக்கஞ்சிச்
சிந்தை கலங்குங் கவுமாரஞ் சிறந்த
காளைப் பருவத்தின்
முந்து பசிநோய் காமநோய் முடுகித்
தணிக்கப் பொருடேட
இந்தப் புவனத் திரவுபக லிடைய
றாத தொழிற்றுன்பம் 93

பொருளுண் டாகிற் காப்பதனாற் பொருந்துந்
துன்ப மரசாலின்
ஒருதம் மிகுத்த வரசரா லுதவுந்
துன்ப மொருகுடைக்கீழ்
நிருப னாகி னேய்மரண நேரு
மென்னும் பயத்தானும்
அருவ தெனையோ மறுமையினி லென்றும்
வாடித் துன்புறுமே. 94

மாகர்க் கசுரர் பகையுளது மகிழ்ச்சி
வாட்ட மிகவுமுள
தாகத் தகலா நோயுமுள தனங்க
ளுளது நசையுளது
போகத் தழுந்தன் மிகவுளது பொன்ற
லுளது கற்பத்தே
சோகத் திறங்க ளிவையுடைய துறக்கத்
தென்னே சுகமுளதே. 95

தேவர் மனிதர் துன்பத்தின் றிறங்க
ளிவ்வா றுகியிடில்
ஆவ கீழா மிருகமுத லசர
மீரு மைவகையில்
ஆவ லில்லாத் துன்புக்கோ ருவமை
யில்லை நிரயத்தில்
நோவ துன்பஞ் சொல்வதெனே நோயே
பிறப்பில் பவத்திற் சுகம்வீடே. 96

வேறு

இந்த விழிவை யுடைய விந்த
மாயை யசத்தே
அந்த வுயர்வை யுடைய வந்தப்
பிரமஞ் சத்தே
தந்த மனதிற் றேர்ந்தோர் தள்ளி
யெஃதை நிற்பர்
உந்தன் மனதி னன்று யூகித்
தமைச்ச பாராய். 97



பொய்யென் றிதனை யறிந்தோர் பொருந்தி
நிற்ப துளதோ
மெய்யென் றதனை யறிந்தோர் மேவா
திருப்ப துளதோ
ஐய முளதோ விதனி லமைச்ச
பாராய் நன்றாய்
உய்ய வறிவி லாதோ ருழல்வர்
நீக்க மாட்டார். 98

பொய்யை மெய்யென் றறிந்து போத
மின்மை யாலே
மெய்யைப் பொய்யென் றெண்ணி மெலிந்தே
யுழல்வ ருலகர்
பொய்யைப் பொய்யென் றறிந்து போத
குருவி னருளின்
மெய்யை மெய்யென் றறிந்தே மெலிவு
தீர்வ ருயர்ந்தோர். 99

துன்பந் தோன்றி லெவருந் துறந்தே
கராய்த் தனித்தே
இன்பந் தேட லியற்கை யின்ப
மென்றே தோன்றில்
அன்ப தாக நீங்கா ரவர்கட்
கெங்ஙன் கூடும்
நன்ப ரம ஞான நாட்ட
மமைச்ச சொல்லாய். 100

இழிவை யுணர்ந்தா லுயர்வை யெவருந்
தேடி நோக்கும்
இழிவை யுணரா ருயர்வை யெய்த
நோக்கா ரென்றும்
இழிவை யிழிவென் றுணர வெந்தக்
காலம் வாய்க்கும்
இழிவை யுடையோர்க் கமைச்ச விதனை
யூகித் துணராய். 101

பேத வாதி களைப்போற் பிரபஞ்
சம்வே றெனவே
ஈத கன்ற தலவே யெமையன்
றியதில் லென்றே
போத விழியிற் றுறந்த புனிதத்
துறவே கண்டாய்
சீத மதிபோற் குளிர்ந்து செனன
வெப்பந் தீரும். 102

இருந்த விடத்தி லிருந்தே யெய்த
லாமென் றுரைக்கில்
திருந்து நிமல மனத்தோர் திற
லெனினு மொழிந்தோ
பொருந்தி யேகாந் தத்திற் போத
மடக்க வேண்டும்
வருந்து மனத்தோர்க் கென்னை வாய்க்கு
மமைச்சா சொல்வாய். 103



முனமே யனைத்து முடித்து முழுது
முணர்ந்தோ ரில்லின்
இனமே சென்று நின்று மேக
நீங்கா ரென்னில்
தினமே யகமாய் நிற்போர் செகத்தி
னியல்பை யுணரார்.
கனமாம் யாழ்ப்பா ணத்தின் கப்ப
லோட்டம் போல. 104

ஒருத்த ரொரு ருளனை யொருவேர்
தாக்கின் முன்னம்
இருக்கு மிடத்தை நீக்கி யேக
ராச தானி
இருக்கு மன்றி முன்க ணிருக்கு
மோதான் சொல்லாய்
திருக்கு ஞான முடையோர் செகத்தை
மெய்யென் றுழலார். 105

வேறு

மனையினின் றுலும் பொருளுயிர்ச் சார்வின்
விருத்தனங் கெடுதலின் மகிழ்ச்சி
இனிமையில் வாட்டம் விடயவின் பதனி
லெட்டுணை யாயினு மாசை
பினையதிற் றமது பிரவிர்த்தி தானும்
பேசுமிந் நான்குமில் லெனினும்
தனையுணர் வதற்குச் சாதகஞ் செயுங்காற்
றள்ளியின் னிற்றலே தகுதி. 106

தீதறு மனையின் பிணியகழ்ந் தந்தச்
செம்பொரு ளின்பமே வேண்டிச்
சாதக மதனிற் றொடங்குகால் விடயந்
தடையதாஞ் சாத்திய மான
போதினி லிவையுந் தோன்றிடா தந்தப்
பொருவிலா னந்தமே விடவே
ஆதலிற் றுறவின் ஞானமஞ் ஞான
மாகுமென் றறைகுவர் பெரியோர். 107

இல்லற மதனி லுறைந்துளோ ரிடத்தி
லிருப்பினு ஞானங்கீ ழிரும்பில்
புல்லிய மாரத் தினமென விளங்கும்
போக்கியில் வினைத்துற வென்னும்
நல்லற மடைந்தோ ரிடத்துறை ஞான
நற்றங்க மிசையிரத் தினம்போல்
எல்லையி லொளியாய் விளங்கிடு மாயி
னில்சிறப் பன்றுஞா னிகட்கே. 108

முனமனை வர்களு முறைவது மில்ல
முத்தியை யுணர்ந்தறி ஞர்களும்
பினமதி னின்ற படியினுற் சங்கை
பேசுவர் துறவுடை யோரை
இனமதை விடுத்தில் லறமது வெய்த
லிலையென வியம்புவ துண்டோ
மனமதி னிதனை யூகிநீ யமைச்ச
மகிமையன் றில்லஞா னிகட்கே. 109



ஆடிய சகல மடங்குகே வலமு
மகற்றியே யொளிப்படை கொண்டு
மூடிய விருளை முழுதையும் வீசி
முடிவில்வீ டதனையே யுணர்ந்தோர்
நீடிய ஞால மிசையினிற் பால
னிசமரு ளுடையன்பேய் பிடித்தோன்
கூடிய குணத்தி னூரிற்போய்க் குடியின்
கூலியா ளினினியல் படைவார். 110

வினைகளோ ரிரண்டுஞ் சமமதாய் ஞான
மேலிடு காலையி னிந்த
மனையின்பங் கான்ற சோற்றிற்கண் டேர்த்து
மாற்றியே கைவிட வருமேல்
தனையுள படியே யனுபவ மதனிற்
ரூனுணர்ந் தானந்த மடைந்தோர்
பினையுமவ் விடயம் பூண்பர்க ளெனவே
பேசுதல் வழங்குமோ சொல்லாய். 111

விடயவின் பதனி னசையுளோர் தமக்கும்
விரிவதாம் பேரின்பச் சுவையின்
அடைவினைச் செவியிற் கேட்டவக் கணமே
யவற்றினை யகற்றிட வருமேல்
இடைமுத லீறின் ஞானவா னந்த
மெய்தினோர் களும்பினு மிந்தக்
கடைமனை வாழ்வை நினைவர் களென்றுற்
கண்டனர் நகையரோ சொல்லாய். 112

பற்றிலே யாயி னவையினி விருப்பேன்
பழையவூழ் வினையெனி லாசை
சற்றெனு முதிப்பித் தல்லவோ வூட்டுஞ்
சகவின்பி லிறையெனு மிச்சை
முற்றுணர் ஞானத் தோர்கள்பூண் பர்களோ
மூடிவிலா னந்தமே பருகி
சிற்றலே மீட்டும் விழிப்பினுங் கான
னிரிற்கண் டுண்முக மடைவார். 113

பவமதை யினிமை யெனவெணி விடயம்
பற்றிநின் றுழன் றவர் தாமே
பவமதை யினிமை யலவெணி விடயம்
பற்றறுத் தருட்குரு வடைந்து
பவமதை யறுக்கு நெறியுணர்ந் தருளிற்
பாவின்ப மடைந்தவர் தாமும்
பவமதை யினிமை யெனவெணி னலவோ
பற்றுவர் விடயவின் புரையாய். 114

கொடிமுதல் வாடும் வேர்முழு தினையுங்
கோதறக் களைந்திடிற் களைந்தும்
படிமிசை கொடிபூ காய்பழ மோங்கல்
பகாதி சயமஃ தினைப்போல்
அடிகடு வீறில் பிரமந்தா ஞகி
யகப்பற்றை யறத்கவ ரிடத்தும்
மடிவுறு மனையில் விரும்பியே நெஞ்சம்
வருத்தன மாதலென் றறைவார். 115



ஆணவ மதனைத் தோய்ந்துட லினைநா
ஞமெனத் தினவெறி வவையைப்
பேணலைச் சுகமென் னுண்மகிழ்ந் திடுவோன்
பேரின்பத் தாசைய தாகிப்
பூணவஞ் ஞான மிலையதின் ஞானம்
பொருந்தியச் சொருபந்தா ஞமி
ஏணவா னந்தத் தழுந்துவோன் விடய
மெய்திடின் ஞானமே யிலையால். 116

வேறு

கனவதனி லுணர்விலது காணுந்தனு வாதிகளைக்
கருதி யேகின்
றுனுமவரி னிதுகனவென் றுணர்ந்தவர்க ணசையிலதி
னுலகு தன்னில்
தன துசுய வுருவதனை யநுபவத்திற் றுனுணர்ந்திச்
சகம தெலாம்
மனமதனிற் சாலமென வுணர்ந்தவரிவ் வுலகின்பின்
மைய னீங்கும். 117

கதிரவன்முன் னிருளிருக்கு நயனமுடை யொருவன்குழிக்
கண்ணே வீழும்
அதிகவலிச் சூரனமர்க் களக்குவெரு வுவன்கிருத
நறையக் காரம்
இதமுளபா யசமுநிரம் பருந்தினன்கூழ் தனிற்செய்வ
னிசசையென்றால்
விதமிவைநான் கினுக்குங்குறை யதின்ஞானிக் கிழுக்காகும்
விடயஞ் சென்றால். 118

இங்குறைந்த பாண்டமதின் வாதனையில் வாதனைக
ளிருக்கு மென்றல்
தங்கவறி வுடையோர்கட் கின்றியமை யாததொழி
லொடுங்கி நிற்றல்
அங்கியைத்தம் பனம்வல்லார்க் கனல்சுடா ததின்வினைக
ளடுக்கா தென்றல்
தங்கும்வினைக் கேதுவாம் விடயமதில் விருப்பாதி
சாரா தென்றல். 119

உணர்வுடைய ஞானியெவ்வ புரிந்திடினு மிழிவிலிழி
வுரைத்த தாகின்
இணையிலிரு தீயனென்பர் யூகமில வதனுன்மற்
றெவைகள் செய்தும்
அணையவதிரும் வெனுமவனே தீயன்மிக ஞானமதற்
காகுந் தாழ்வா
னணுகினன்றே ஞானமொரு வனேஞானி யெனப்பெயரு
நண்ணி நிற்றல். 120

கருவயிற்றை யுடையதுவுங் கனவயிற்றை யுடையதுவுங்
கருதிப் பெண்ணின்
உருவதனைக் குறிப்பதினுக் கிடிற்றேன்று முளபடியே
யுலகு தன்னில்
குருவையடைந் தவனருளிற் சொரூபத்தை யநுபவமாக்
குறித்து ளோரும்
இருவையத் திடம்பமாய்த் தமைஞானி யென்போரு
மேதிற் றேன்றும். 121



அருச்சுனற்கு மிராமருக்கு மதிகார மவைபார்த்தே
யறைந்த நூலின்
கருத்தறியாய் ஞானமொன்றே பிரமாணஞ் சரிதையது
கணக்கன் றாகும்
விருத்தமறி வாசார முடையோனே ஞானியில்லோன்
விருத்த னாகும்
திருத்தமுட னமைச்சவிது துணிவென்றே யுட்கொள்வாய்த்
தீர னாகி. 122

வேறு

என்றங் கனேகமாய் விசித்தே யிராச
யோகி யுரைசெய்து
நின்று வாக்குத் தனையடக்கி நிமிடத்த
கற்றி மனத்தினையும்
ஒன்று மில்லா வெறும்பாழா யொன்றுஞ்
சமாதி தனையடைந்தான்
நின்றங் கமைச்ச னிதுகண்டிந் நேர்மை
புதிதென் றதிசயித்தான். 123

இந்த வுணர்வு நமக்கின்ன மெய்த
வில்லை நாமிங்கே
எந்த வுணர்வு கொடுநிற்பே மென்ன
வமைச்சன் யூகித்து
வந்த வழியே தான்றிரும்பி வளப்ப
முடைய மாபுரிக்கே
பந்த முடையோ ருடனிருந்து பகர்ந்தா
னரச னியற்கையெல்லாம். 124

கேட்ட பேர்கண் மிகவியந்து கிட்டா
தென்று மிம்முனிபோல்
தேட்ட முடனே யவரவர்க டேடி
வந்து பணிந்திடவும்
வாட்ட முடனே தாய்தந்தை மனையாள்
பதத்தில் வீழ்ந்திடவும்
நாட்ட மாறு பாடின்றி நகைசெய்
திருந்தா னற்றவனே. 125

வந்த பேர்க ளுடன்வார்த்தை மலரா
திருப்ப தவரறிந்து
பந்த முடையே நமக்கென்னே பகர்ந்தாற்
றோன்று மெனத்திரும்பித்
தந்த மிடத்திற் சென்றார்க டவனுஞ்
சிறிது நாட்கழித்துத்
தொந்த மொன்று மில்லாத சுயமா
முத்தி தானானன். 126

## வேறு.

இந்தமா ராஜன் சென்ற விதிகாசந் தனைப் படிப்போர்
சிந்தனை யொன்று மின்றித் தீரவே துறவ ராகி
அந்தமு மாதியில்லா வமலமே வடிவ மாவர்
எந்தமை யருளி னாண்ட வெழிற்குரு பரையே வாழி. 127



## வேறு

அறியது துறவற மல்ல தில்லையான்
மருவிய துறவற மொருவி மன்னனாய்
உருசெழு முடிகவித் துலக மாள்வது
பெருவிலை மணியினைப் பிண்டிக் கீதலே 128

## கலைமகள் துதி.

ஆய கலைக ளறுபத்து நான்கினையு
மேய வுணர்விக்கு மென்னம்மை—தூய
வுருப்பளிங்கு போல்வாளென் னுள்ளத்தி னுள்ளே
யிருப்பளிங்கு வாரா திடர்.

## சொரூபானு சந்தானம்-

சாக்கிர மிலை சொப்பன மிலை
சார் சுழுத்தி யிலையிதிற்
றுக்கு விசுவனிற் றைசத னிலை
தங்கு பிராஞ்ஞனு மில்லை மூன்
றுக்கை யுமிலை யவை யவித்தை
விகார மாதலி னாலிவை
நீக்கி நின்றிடு துரிய பூரண
நித்த போத சிவோகமே. சொரூபமே

—:o:—

**மஹாராஜா துறவு முற்றுப்பெற்றது.**

**சர்வஞ்சின்மயம்.**



குமரன் அச்சுக்கூடம், குடியாத்தம்.